4

# கருவி

டெலிபோன் மணி அலறிக்கொண்டிருந்தது. வாசலில் உட்கார்ந்து பீடி குடித்துக் கொண்டிருந்த பஹதூர் சலிப்புடன் அதை அவித்து விட்டு உள்ளே விரைந்தான்.

''ஹலோ!''

''பஹதூரா?''

''ஆமாம்.''

''மேம்ஸாஹேப் என்ன செய்கிறார்?''

''பேபியைத் தூங்கப் பண்ணுகிறார்.''

''ஓ! பேபி எப்படியிருக்கிறாள் இப்போது?''

''அப்படியேதான் இருக்கிறாள்.''

''பாவம்.. மேம்ஸாஹேப்பைத் தொந்தரவு பண்ணாதே. நான் போன் பண்ணினதாகச் சொல்லு.''

''அச்சா ஜீ.''

அவன் ஒருவித ஆயாசத்தோடு போனை 'டக்'கென்று வைத்தான்.

''பஹதூர்!''

''ஜீ?''

அவன் எஜமானியின் படுக்கையறை வாயிலில் போய் நின்றான்.

"யாரிடமிருந்து போன்?"

அவன் விவரத்தைச் சொன்னான்.

ரூபா சூள் கொட்டினாள். மேம்ஸாஹேப்புக்கு எதிலும் ஓர் அலுப்பு என்று நினைத்தபடி பஹதூர் தலைநிமிர்ந்து அவளைப் பார்த்தான்.

- ஜீனத் அமன். அப்படித்தான் தோன்றுகிறது அவளைப் பார்க்கும்போதெல்லாம் அவனுக்கு. அதே உடல்வாகு, ஆனால் அதைவிட அழகான முகம். வியாதிக்காரக் குழந்தையை மடியில் கிடத்திக் கொண்டு சோகச் சித்திரமாக உட்கார்ந்திருக்கும் நிலையில் கூட கண்ணைப் பறிக்கிறது இவளுடைய அழகு. ஸல்வார் கம்மீஸ் மேல் வழக்கம் போல் துப்பட்டா இல்லை. பிரார்த்தனை செய்யப் போகும் போதுதான் அந்த துப்பட்டாவுக்கு மரியாதை. மற்ற நேரத்தில் அது நாற்காலியிலோ கட்டிலின் மேலோ கிடக்கும்.

"பஹதூர், இப்பொழுது என்ன மணியிருக்கும்?"

அவன் சட்டென்று சுய நினைவுக்கு வந்தான்.

"நாலு."

எஜமானி ஏதும் சொல்வதற்கு முன் அவன் பேபிக்கு அந்த நேரத்துக்குக் கொடுக்க வேண்டிய மருந்தைக் கொண்டு வந்தான்.

அவள் அவனை நன்றியோடு பார்த்தாள்:

"எத்தனையோ பாவங்களுக்கு மத்தியில் கொஞ்சம் புண்ணியம் செய்திருக்கிறேன் போலிருக்கிறது. அதான் நீ எனக்கு வேலைக்காரனாக வந்திருக்கிறாய்" என்றாள்.

மருந்தைக் கண்டவுடனேயே பேபி கையையும் காலையும் உதைத்துக் கொண்டு அழ ஆரம்பித்தாள்.

மேம்ஸாஹேப்பின் முகத்தில் அலுப்பும் கோபமும் படருவதை பஹதூர் கவனித்தான். கடந்த மூன்று மணி நேரமாக பேபியை மடியில்

வைத்துக் கொண்டு இருக்கிறாள். பேபி, உடம்புக்கு வந்ததிலிருந்து தூங்குகிற நேரத்தில் அம்மாவின் மடியை விடுவதில்லை. இரவும் சரிவர தூக்கமில்லாததால் எஜமானிக்கு இப்பொழுது மிகவும் களைப்பாக இருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டான் பஹதூர். அவன் சட்டென்று குழந்தையின் கையையும் காலையும் பிடித்துக் கொண்டான்.

''மருந்தைக் கொடுங்கள் மேம்ஸாஹேப்.''

எப்படியோ இருவருமாக மருந்தை பேபிக்குள் செலுத்தி னார்கள். தனக்கு இஷ்டமில்லாததைச் சாப்பிட வைத்த கோபத்தினால் பேபி பெரிதாக அழ ஆரம்பித்தாள். பஹதூர் குழந்தையைத் தூக்கியபடி சமாதானப்படுத்த ஆரம்பித்தான்.

தன் அலுப்புத் தீர ரூபா காலை நீட்டிக் கொண்டாள். பளிங்கு போல் இருக்கும் உடம்பில் கணுக்கால் இரத்தச் சிவப்பாக ஆகி யிருந்தது. 'கால் போச்சு' என்றபடி சிவப்பேறிப் போன பாதங்களை நீவி விட்டுக் கொண்டாள். ஓர் ஆடவன் எதிரில் இருக்கிறான் என்கிற நினைவே இல்லாதவள் போல் அவள் கைகளை உயரத் தூக்கிச் சோம்பல் முறித்தாள். கையில்லாத மெல்லிய கம்மீஸ்.. ஜீனத்அமனின் உடம்பு.. அவளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த பஹதூர், கலவ ரத்துடன் மறுபக்கம் திரும்பிக் கொண்டான். இவள் ஏன் இப்படி இருக்கி றாள்? தன்னை ஒரு மனிதனாக நினைக்கமாட்டாளா? தன்னை ஒரு மேஜையாய்..... நாற்காலியாய்...

பேபி தோளில் தூங்கிவிட்டதை உணர்ந்து பஹதூர் அவளை மெள்ள மெத்தையில் கிடத்தினான்.

''பேபி தூங்கிவிட்டாள். நீங்களும் ஓய்வெடுத்துக் கொள்ளுங் கள் மேம்ஸாஹேப்!'' என்றபடி வெளியே வந்தான் பஹதூர்.

உள்ளே, அவளெதிரில் தனக்கேற்படும் புழுக்கத்தை அவனால் தாங்க முடியாது போலிருந்தது. தன்னால் தன் உணர்ச்சிகளை ஏன் கட்டுப்படுத்த முடியவில்லை என்று அவனுக்குப் புரியவில்லை. காது நுனி சிவந்து சூடேறி விடுகிறது. மார்பு படபடத்துப் போகிறது. இந்தக்

கோடையில் நேபாளத்துக்குப் போய் முறைப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு வந்துவிட வேண்டும். மனத்திற்கும் உடலுக்கும் கடிவாளம் வேண்டும், அது அடங்காமல் போவதற்கு முன். அது முடியவில்லையோ? வேறு இடத்தில் வேலை பார்த்துக் கொண்டு போய்விட வேண்டும். இந்த மாதிரி துப்பட்டா இல்லாமல், அவனை மனிதனாகவே பாவிக்காத ஒரு பெண்ணின் எதிரில், எடுத்ததற்கெல்லாம் அவன் உதவியை நாடும் பெண்ணின் எதிரில் ஜடமாய் வளைய வர இயலாது.

''ஓ, பஹதூர் மட்டும் இல்லாவிட்டால் இந்த வீடு என்ன ஆகியிருக்குமோ?'' என்று ரூபா தன் கணவனிடம் சொல்வதை அவன் கேட்டிருக்கிறான்.

அவன் சிரித்துக் கொண்டான். எத்தனை பைத்தியக்காரத்தனமான சிக்கல்?

இந்த ரூபா கல்யாணமாகி வருவதற்கு முன்பே அவன் கிஷண்ஸிங்கின் வேலைக்காரனாக இருந்தான். முன்பெல்லாம் கிஷண்ஸிங் வெகு உல்லாசமாக இருப்பார். ஆபீஸ் முடிந்ததும் சிநேகிதர்களுடன் கொண்டாட்டம்தான். அவர்களுக்கு டீயும் சிற்றுண்டியும் பஹதூரே வெகு உற்சாகமாகச் செய்வான். ரூபாவுக்கும் அவருக்கும் கல்யாணம் நிச்சயம் ஆனதும் அவளது வீட்டாருக்குத் தெரியாமல் பெண் குரலில் அவளுக்கு போன் செய்வதை அவன் கவனித்து ரசித்திருக்கிறான். கல்யாணமாகி வந்த ரூபாவின் அழகைக் கண்டு அந்தப் பத்து மாடிக் கட்டடமே வாயைப் பிளந்தது. வேலைக்காரர்கள் முதற்கொண்டு விமரிசிக்கத்தொடங்கி விட்டார்கள்.

கிஷண்ஸிங்குக்கும் ரூபாவுக்கும் இந்த உலக நினைவேயில்லை. பஹதூர் அவர்களுக்கு ஒரு சௌகர்யமான கருவி. அவர்களுக்குப் பசித்தபோது சாப்பாட்டை நீட்ட.... வீட்டைத் துப்புரவாக வைத்துக் கொள்ள... அவர்கள் ஊர் சுற்றும் போது காவல் காக்க..

கருவி... பஹதூர் புகைத்து முடித்த பீடியை ஆயாசத்துடன் கீழே போட்டுக் காலால் மிதித்தான். ஹே, பகவான்! இந்தப் பணக்காரர்

களுக்குத்தான் எத்தனை சுய சிந்தனை? வேலைக்காரனுக்கு மனசிருக் கிறதா என்பதைப் பற்றி அவர்களுக்குச் சந்தேகமில்லை... மனசு செயல்படக்கூடாது என்பதே அவர்களது விருப்பம்...

கிஷண்ஸிங்-ரூபாவின் அன்பின் வளர்ச்சியையும் ஊடல் களையும் அவன் சினிமா பார்ப்பவனைப் போல் கவனித்து வந்தான். பேபி பிறந்து இரண்டு வருடம் வரை இடைவேளைக்கு முன்வரை ஓடும் சினிமாப் படம் மாதிரி சந்தோஷமாகத்தான் இருந்தது. பிறகு வந்தது சைத்தானின் ஆட்டம். திடீரென்று பேபிக்கு உடல் நலம் கெட்டது. எஜமானும் எஜமானியும் குழந்தையைத் தூக்கிக்கொண்டு டாக்டரிடம் நடையாய் நடப்பதை பஹதூர் யோசனையுடன் கவனித் திருக்கிறான். இருவரும் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு வருவதையும் சமைத்து வைத்த சாப்பாடு அப்படியே மிகுந்து போவ தையும் கண்டு கவலைப்பட்டவனுக்கு நாளா வட்டத்தில் பழகிப் போய்விட்டது. வீட்டில் பழைய கலகலப்பில்லை -சங்கேத சிரிப் பில்லை. அதற்குப் பதில் அவர்களிருவரிடையே சிறு சிறு பூசல்களும் வாக்கு வாதங்களும் தொடங்கியிருப்பது நன்றாகத் தெரிந்தது.

குழந்தைக்கு இருதயக் கோளாறு என்று அவன் தெரிந்து கொண்டான். அது மிகப் பயங்கரக் கோளாறாக இருக்க வேண்டும். அந்தக் கட்டிடத்தில் இருக்கும் பெண்மணிகளெல்லாம் இது குணமாகிற கேஸ் இல்லை என்று சொல்வது, மற்ற வேலைக்காரர்கள் மூலம் தெரிகிறது. மேம்ஸாஹேப்பை எதேச்சையாக வெளியில் பார்க்க நேரிட்டால் மற்றவர்களிடையே பேச்சும் சிரிப்பும் பட்டென்று நின்றுவிடுகிறது, திடீரென்று சோகம் கவ்வின மாதிரி... அப்பொழுதே ஏதோ துக்க சம்பவம் நிகழ்ந்துவிட்ட மாதிரி மூஞ்சியைத் தொங்கப் போட்டுக் கொண்டு கேட்கிறார்கள். ''பேபீ கைஸீ ஹை?'' எல்லா வற்றையும் கேட்டுவிட்டுத் தைரியம் சொல்ல வார்த்தை கிடைக் காமல், ''பக்வான் ஹை'' என்கிறார்கள். டாக்டரிடம் நடையாய் நடந்தும் பேபிக்கு ஏதும் குணம் இருப்பதாக அவனுக்குப்பட வில்லை.. நாளுக்கு நாள் மோசமாகத்தான் ஆகிற மாதிரியிருந்தது

அவனுக்கு. இந்த நிலைமைதான் எஜமானன் எஜமானியை எவ்வளவு தூரம் விலக்கிவிட்டது என்று நினைத்து அவன் வியந்து போனான். நாள் முழுவதும் குழந்தைபடும் அவஸ்தையைப் பார்த்துக் கொண்டும் மடியில் கிடத்திக் கொண்டும் அதன் பிடிவாதத்துடன் ஈடுகொடுத்துக் கொண்டுமிருக்கும் எஜமானி, மாலையில் கிஷண் ஸிங் வரும் வேளையில் சோர்ந்து சுரத்தில்லாமல் போவது இயற்கை யென்றாலும் அனாவசியமாக எடுத்ததற்கெல்லாம் அவரிடம் சண்டை பிடிப்பதுபோல் அவனுக்குப் பட்டது. கிஷண்ஸிங்குக்கு மகா ரோசம். மனைவி ஏதாவது ஏடா கூடமாகப் பேசிவிட்டால் கோபம் பொத்துக் கொண்டு வந்துவிடுகிறது.

ஒரு கஷ்டம் என்று வந்துவிட்டால் இவர்கள் எப்படி நிலைகுலைந்து போய்விடுகிறார்கள்! அவனுடைய மாயி இந்த மேம்ஸாஹேப்புக்கு நேர் எதிரிடை. அவளுக்கு எல்லாமே சாதாரண விஷயம்... வாழ்க்கையின் போராட்டங்கள், பணக் கஷ்டம், கணவ னோடு போடும் சண்டைகள்... எல்லாமே. நாள் முழுவதும் சண்டை போட்டுவிட்டு அந்தி மயங்கும் வேளையில் அவளும் பாபாவும் குழைந்து இழைந்து உட்கார்ந்திருப்பதைப் பார்க்கும்போது முன் பெல்லாம் அவனுக்கு ஆத்திரமாக வரும். அருவருப்பாகவும் அசிங்க மாகவும் தோன்றும். இப்பொழுது தெரிகிறது அவர்கள் எவ்வளவு விவேகமாகவும், இயற்கையாகவும் நடந்து கொண்டார்கள் என்று. அந்த விவேகம் இங்கு இல்லாததால்தான் இந்த வீட்டில் சூன்யம் பிடித்திருக்கிறது. இவர்கள் மனசில் பிரளயமேற்பட்டிருக்கிறது. இணைக்கும் பாலம் உடைந்த மாதிரி..

கிஷண்ஸிங்குக்குக் குழந்தையிடம் போதிய அக்கறை இல்லை என்று ரூபாவுக்கு எண்ணம். அவள் குழந்தையைச் சரியாகக் கவனிக்கவில்லை என்று அவருக்கு எண்ணம். அவர் ஆபீஸிலிருந்து வந்தவுடனேயே ஆரம்பிக்கும் வாக்குவாதங்களும் சூடான வார்த்தை களும். கடைசியில் ரூபா அழ ஆரம்பிப்பாள். கிஷண்ஸிங் கோபத் துடன் பால்கனியில் உட்கார்ந்துகொள்வார்.

சமையலறையிலிருந்து எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டு நிற்பான் பஹதூர். சற்றுப் பொறுத்து டீயையும் பிஸ்கெட்டையும் எஜமானனின் முன்னால் மௌனமாக வைப்பான்.

இந்தச் சண்டைகளும் வாக்குவாதங்களும் மனச்சுமையும் அவிழ்க்க முடியாத சிக்கலாகப் போய்விட்டாற் போலிருந்தது. இதற்கெல்லாம் காரணமான பேபி, எதைச் சாதிக்கவென்று பிறந்திருக்கிறாள்? பஹதூருக்குப் புரியவில்லை. இப்பொழுதெல்லாம் கிஷண்ஸிங் காலை வேளையில் குருகிரந்த ஸாஹேப்பை வாய்விட்டுப் படிக்கிறார்-

உன் நாமமே விளக்கு.

துன்பமே அதற்கு எண்ணெய்.

விளக்கின் ஒளியில் எண்ணெய் தீர்ந்து விட்டது, நான் துன்பத்தைக் கடந்து விட்டேன்....

ஐயோ, பாவம் என்றிருக்கும் பஹதூருக்கு. இந்தத் துன்பம் தீரப்போவது எப்போது? வீட்டிலிருக்கும் இத்தகைய சூழ்நிலையினால் அவன் மேல் முழுப் பொறுப்பும் விழுந்தது. எதற்கெடுத்தாலும் ரூபாவுக்கு பஹதூரின் உதவிவேண்டியிருந்தது. சந்தர்ப்பங்கள் ஏற்படுத்தும் அருகாமையும் அவனை ஜடமாய் நினைத்து அரை மார்பு தெரியும்படி அணிந்த கம்மீஸுடன் துப்பட்டா இல்லாமல் வளைய வரும் அவளது அப்பாவித்தனமும் சில சமயங்களில் அவனைத் திண்டாட வைத்துவிடுகிறது. அவன் தனக்குள் சிரித்துக் கொண்டான். நிஜமாகவே அப்பாவித்தனம்தானா? ஸர்தார்ஜிக்கும் அவளுக்குமிடையே ஏற்பட்டிருக்கும் இடைவெளியினால் விளைந்த ஏக்கத்தின் எதிரொலி இல்லையா?

பஹதூர் எழுந்தான். இந்த வீட்டை விட்டுப் போய்விட வேண்டும், ஏதும் விபரீதம் ஏற்படுவதற்கு முன்... இங்கு இன்னும் தங்கியிருப்பது இந்த பேபியினால்தான்...

கேட்டுக்குள் கிஷண்ஸிங்கின் கார் நுழையும் ஓசை கேட்டது. அவன் சட்டென்று சுய நினைவு பெற்றவன் போல் கீழே ஓடினான், அவருடைய கைப்பையைத் தூக்கிக் கொண்டு வர.

கிஷண்ஸிங் நிதானமாக உள்ளே நுழைந்தார். அடுப்பில் டீக்கு ஜலம் வைத்துக் கொண்டிருந்த பஹதூருக்கு எஜமானனும் எஜமானியும் பேசுவது நன்றாகக் கேட்டது.

''பேபி இன்று எப்படியிருக்கிறாள்? விசேஷமாக ஏதாவது மாறுதல் இருக்கா?''

''ஏன்?''

''இல்லை, எப்போதும் போல்தானே இருக்கிறாள்? என்னுடைய 'பாஸ்' இன்றிரவு டில்லியிலிருந்து வருகிறார். ஏர்போர்ட்டுக்குப் போய் அழைத்து வரவேண்டும். வருவதற்குப் பத்து மணி ஆகும். போகட்டுமா?''

''ஏன், என்னைக் கேட்டுக்கொண்டு தான் எல்லாம் செய்கிறீர்களா?''

எஜமானியின் குரலில் இருந்த கோபத்தைக் கண்டு பஹதூர் திகைத்தான்.

கிஷண்ஸிங்கின் பதில் அமைதியாகவே வந்தது:

''என்னை தவிர யாரும் போவதற்கில்லை. குழந்தை, தினம் போல் இருந்தால் இரண்டு மணி நேரத்தில் போய்விட்டு வந்துவிடலாம் என்று பார்க்கிறேன்.''

''சாதாரணமாகவே குழந்தையின் நிலை மோசமாகத்தான் இருக்கிறது. நிமிஷத்துக்கு நிமிஷம் மாறுகிறது. உங்களுக்கு என்ன கவலை? போய்விட்டு வாருங்கள்... நீங்கள் இருந்துதான் என்ன சகாயம் செய்துவிடுகிறீர்கள்? பஹதூரே தேவலை, கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்க...!''

பஹதூர் கலவரத்துடன் டீயைக் கலந்தான். இந்த மேம்ஸாஹேப்புக்கு என்ன வந்துவிட்டது?

கிஷன்ஸிங் கத்துவது கேட்டது.

''வரவர விவஸ்தை இல்லாமல் பேசுகிறாய். சைத்தான்தான் புகுந்து இருக்கிறது உன்மனசில்.''

கோபத்துடன் பால் கனியில் உட்கார்ந்திருந்த அவர் முன்னால் டீயையும் பிஸ்கெட்டையும் வைத்தான் பஹதூர்.

சற்று நேரத்திற்கெல்லாம் எஜமானனின் கார் கிளம்பும் ஓசை கேட்டது.

மாலைக்கான வேலையை முடித்துக் கொண்டு பஹதூர் படுக்கை அறையை எட்டிப் பார்த்தான். பேபி படுக்கையில் விட்டத்தைப் பார்த்தபடி ஓர் அசாதாரண அமைதியுடன் படுத் திருந்தாள். இன்று மோசமில்லை என்று நினைத்துக் கொண்டான் அவன். எஜமானி குப்புறப் படுத்துக் கொண்டு விசித்துக் கொண்டி ருந்தாள். அழட்டும். நல்லதுதான். சைத்தான்தான் புகுந்திருக்கிறது இந்த வீட்டில். பஹதூர் ஓசைப்படுத்தாமல் தன் அறைக்குத் திரும்பினான். இரண்டு மணி நேர ஓய்வு எடுக்கலாம்.

அவன் தன் அறைக்குப் போவதற்கும் அவன் நண்பன் ஸோனார் வருவதற்கும் சரியாக இருந்தது. ஸோனார் அவனது பால்ய சிநேகிதன். இருவரும் சேர்ந்து தான் நேபாளத்திலிருந்து வந்திருந் தார்கள். பெரிய 'பத்மாஷ்' என்று பெயர் வாங்கினவன். பஹதூரைப் பார்க்க வரும்போதெல்லாம் பாட்டில்களோடுதான் வருவான். தானும் ஒரு போடு போட்டு பஹதூருக்கும் திணிப்பான்.

சோர்ந்த நிலையில் இருந்த பஹதூருக்கு அவனைப் பார்த்ததும் உற்சாகம் ஏற்பட்டது. குஷியாக ஊர்க்கதையெல்லாம் பேசி முடித்ததும் ஸோனார், தான் கொண்டு வந்த சரக்கை அவிழ்த்தான். ஒவ்வொன்றாக பாட்டில்கள் காலியாகிக் கொண்டிருந்தன.

''பஹதூர்!'' என்று வெகு தொலைவிலிருந்து யாரோ கூப்பிடுவது போல் இருந்தது.

பஹதூர் பாட்டிலைப் பார்த்து முணு முணுத்தான். ''வருகிறேன் மேம்ஸாஹேப்...''

நாலைந்து முறை குரல் ஒலித்த பிறகு தேய்ந்து போயிற்று.

''மேரே ஸ்வப்பனோக்கி ராணி கப்பு ஆயேகிதூ...''-சோனார் பாட ஆரம்பித்தான். பஹதூர் தாளம் போட்டான்.

''இருதயங்களை அறிந்தவனே-என் இருதயத்தில் இருக்கும் இந்த ஆசையை நிறைவேற்று...''

''யாருடா அது?'' என்றான் ஸோனார்.

''மேம்ஸாஹேப் குருகிரந்தம் சொல்கிறாள். உனக்குத் தெரியுமா ஸோனார்? மேம்ஸாஹேப் பிரார்த்தனை செய்யும் போதுதான் துப்பட்டா போட்டுக் கொள்வார்!''

''அப்போ அவர் பிரார்த்தனை செய்யும்போது நாம் பார்க்க வேண்டாம்!''

இருவரும் பெரிதாகச் சிரித்தார்கள். ''யாரு மாதிரி இருப்பாள் என்று சொல்வாய் உன் மேம்ஸாஹேப்?''

''ஜீனத் அமன்.'' - பஹதூர் கைகளால் வளைவுகளைக் காண்பித்தான்.

''கொடுத்து வைத்தவர்டா உன்னுடைய ஸாஹேப்!''

''ஊஹூம். சுத்த அசடுகள் இருவரும். எப்பவும் சண்டை, சாகக் கிடக்கிற குழந்தையைச் சாக்கிட்டு... இப்பவும் ஸாஹேப் கோபத்தோடு வெளியே போய்விட்டார், மேம்ஸாஹேப்பைத் தனியே விட்டுவிட்டு....''

''பஹதூர்...!''

மறுபடியும் அவசரமாகக் குரல் ஒலித்தது. விட்டு விட்டுத் தீனமாக ஒலித்த அந்தக் குரலை ஒருவித ரசனையுடன் இருவரும் கேட்டபடி உட்கார்ந்திருந்தார்கள்.

ஸோனார் மெள்ள எழுந்தான்.

''பாவம், ரொம்பக் கூப்பிடுகிறாள். மேம்ஸாஹேப்பை அலட்சியப்படுத்தக்கூடாது, போகலாம் வா'' என்றான்.

''ஆமாம், வா'' என்றபடி பஹதூரும் எழுந்தான். இருவரும் தள்ளாடிக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தார்கள்.

''பஹதூர்...''

''இதோ வருகிறேன் மேம்ஸாஹேப்!''

அவள் உள்ளிருந்தபடி கத்தினாள்:

''பேபிக்கு மோசமாக இருக்கிறது. எங்கே தொலைந்து போனாய்? ஸாஹேப்பும் போய்விட்டார் வெளியே...!''

''அதற்குத்தான் நாங்கள் வந்திருக்கிறோம் மேம்ஸாஹேப்...'' என்றான் ஸோனார்.

அவள் திடுக்கிட்டு நிலைப்படியில் நிற்கும் அவர்கள் இரு வரையும் பார்த்தாள். அவர்களது பார்வையின் தீட்சண்யத்தைப் பார்த்து அவளது கைகள் சட்டென்று துப்பட்டாவை எடுத்துப் போர்த்திக் கொண்டன.

பேபி மூச்சு இரைத்தபடி படுத்திருந்தாள். ஸோனார், ரூபாவையே பார்த்தபடி நடந்தான். ரூபாவின் குரல் நடுங்கிற்று. நம்ப முடியாதவளைப் போல் ''பஹதூர்!'' என்று கத்தினாள், ''இவனை ஏன் அழைத்து வந்தாய்? போய் விடுங்கள் இங்கிருந்து... என் குழந்தை சாகக் கிடக்கிறது... போய்விடுங்கள் நாய்களே!''

ஸோனார் கேட்கவுமில்லை... பேசவும் இல்லை... ''பாவம்!'' என்றான் பஹதூர்.

''போய்விடு, போய்விடு...''

பேபி திடீரென்று வினோதமான ஒலியை எழுப்பினாள் - குரல்வளை நெறிக்கப்பட்ட மாதிரி. மூவரும் திடுக்கிட்டுத் திரும்பி னார்கள். ஸோனாரின் பிடி தளர்ந்தது. ரூபா பிய்த்துக் கொண்டு பேபியின் அருகில் வந்தாள். பஹதூருக்குச் சட்டென்று விழிப்பு ஏற்பட்ட மாதிரி இருந்தது. ஸோனாரைப் பலவந்தமாக வெளியில் தள்ளிவிட்டு வந்தான். பேபி, ''தண்ணி வேண்டும்'' என்று சைகை காட்டினாள். பஹதூர் பழக்கத்தினால் 'கிடு கிடு'வென்று கிளாஸில்

நீரை ஊற்றி ரூபாவின் கையில் கொடுத்தான். அந்தத் தண்ணியை ஸ்பூனில் எடுத்து பேபியின் வாயில் ஊற்றுவதற்குள் ரூபாவின் கைகள் நடுங்கும் நடுக்கத்தையும் கீழே எல்லாம் சிந்தி வழிவதையும் பிரமை பிடித்தவன் மாதிரி அவன் பார்த்துக் கொண்டிருந்தான்.

பேபி பெருந்தாகத்துடன் நீரைக் குடித்தாள். கடைசி வாய் குடிக்கையில் திறந்த கண்ணும் வாயும் அப்படியே இருக்க, விம்முகிற மார்பு அடங்கிப் போயிற்று.

''பேபீ....!''

-பஹதூர்தான் அலறினான். கீழே மண்டியிட்டு உட்கார்ந்து, கட்டில் கால் மேல் முகத்தை அறைந்து கொண்டு அலறினான்.

''முஜே மாஃப் கர்தீஜியே மேம்ஸாஹேப்!'' (என்னை மன்னியுங்கள்..)

மேம்ஸாஹேப் அழக்கூட சொரணையில்லாதவள் மாதிரி அதிர்ச்சியுடன் உட்கார்ந்திருந்தாள்.

பஹதூர் நிச்சலனமாய் அடங்கிக்கிடந்த பேபியின் சடலத்தைப் பார்த்தான். தீராத வியாதியோடு இது எதைச் சாதிக்கப் பிறந்திருக் கிறது என்று தான் யோசனை செய்த பேதைமையை நினைத்துப் பார்த்தான்... எல்லோரும் ஏதாவது காரியத்துக்குக் கருவிகள்தாம், அவரவர் பாணியில்.

வாயிற் கதவு திறக்கும் ஓசை கேட்டது. கிஷண்ஸிங் அறையின் உள்ளே வந்தார். அவர் பீதி நிறைந்த முகத்துடன் பேபியின் அருகில் வந்த போது அப்பொழுதுதான் உணர்வு ஏற்பட்ட மாதிரி ரூபா அவருடைய கைகளைப் பிடித்துக் கொண்டு 'ஓ'வென்று அழுதாள். கிஷண்ஸிங் அவளை அணைத்துக் கொண்டார். பஹதூர் தலையைக் குனிந்து கொண்டு வெளியே சென்றான்.

**ஆனந்த விகடன் 1969**

